உ

சிவமயம்.

பாலருவாயர் துணை.

ஞானசம்பந்தர்

# திருப்பள்ளி யெழுச்சியும்

திருவேரக

# வருக்க மாலையும்.



இவை

தேவகோட்டை

"பாலகவி" வயிநாகரம்

**வே. இராமநாதன் செட்டியாரால்**

தமது 25, 26-ம் ஆண்டு நிறைவுகளுக்கு

அறிகுறியாக இயற்றப்பெற்றன.

தேவகோட்டை

ஸ்ரீ "ஆனந்தவல்லி" அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

விக்கிரம௵

உ
சிவமயம்.
பாலருவாயர் துணை.

ஞானசம்பந்தர்

# திருப்பள்ளி யெழுச்சியும்

திருவேரக

# வருக்க மாலையும்.



இவை

**தேவகோட்டை**

“பாலகவி” வயிநாகரம்

## வே. இராமநாதன் செட்டியாரால்

தமது 25, 26-ம் ஆண்டு நிறைவுகளுக்கு

அறிகுறியாக இயற்றப்பெற்றன.

தேவகோட்டை
ஸ்ரீ “ஆனந்தவல்லி” அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பெற்றன.

விக்கிரம ஞு

உ

சிவமயம்.

பாலறாவாயர் துணை.

# சாற்றுக்கவிகள்.

திருவையாறு

அரசர் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர்

(Professor of Tamil)

## திரு. R. வேங்கடாசலம் பிள்ளையவர்கள்:-

ஊழி யுறங்கும் உலகோர் துயினீக்கும்
காழிப் பெருமான் கழலிணைக்கண்—சூழுளத்தே
நாரார் திருராம நாதன் உரைக்குமுறை
ஏராரிப் பள்ளி எழுச்சி.

வள்ளலெம் மாதேவன் மாண்பார் அமுதோடை
நள்ளும் மலர்ராம நாதன்றன்-உள்ளமெழும்
பத்திப் பசுந்தேனே பாநலஞ்சா லிந்நூலாம்
எத்திருவும் ஓங்க இவர்க்கு.

திருவையாறு

அரசர் கல்லூரித் தமிழாசிரியர் வித்துவான்

**திரு. இ. கோவிந்தசாமி பிள்ளையவர்கள்:-**

செந்தமிழ் வள்ளலாந் திருஞான சம்பந்தத்
தேவின்மேற் றேனினுந் தித்திக்கச் செய்தனன்
பந்தம தற்றுயர் பானடி தந்திடும்
பள்ளியெ ழுச்சியெனும் பகர்பிர பந்தத்தைக்
கந்தவேள் கழலிணை கருத்தினிற் கண்ணிய
கருத்தனி ராமநாதக் கனதன வணிகர்கோன்
செந்திரு சேரிரு பத்தொடைந் தென்றுசேர்
திகழாண் டிறைவினின் செய்தியைக் குறித்தே.

சகரமோ டாறு மானேன் சங்காற் குபதே சித்த
அகரமே முதலா மீரா றம்பக னோர கன்மேல்
அகரமே னகர மீறு வாக்கினன் வருக்க மாலை
நிகரிலா மாதே வன்சேய் நேருறு மிராம நாதன்.

இவ்வருக்க மாலைதனை யேத்தினர்க ளெப்போதும்
கவ்வையொரீஇ வாழ்வார் கவின்று.

தேவகோட்டை

சைவப்பிரகாச வித்தியாசாலைத் தலைமை ஆசிரியர்

## திரு. அ. கணபதி ஐயா அவர்கள்:-

ஆழியற்கும் அறியவொணா விறைவன் றாளி
  லருட்பாடல் மூன்றாகு மாண்டிற் பாடிப்
பூழியற்குச் சுரந்தீர்த்துச் சமணை வென்று
  புகழேடு நதியெதிரிற் புகுதச் செய்து
எழிசைக்கு மிகுத்திடும்யாழ் முரியைப் பாடி
  இயற்பாணற் குயர்பெருமை யீந்த வெங்கள்
காழியற்குத் திருப்பள்ளி யெழுச்சி சொன்னான்
  கவிராம நாதனெனுங் கலைவல் லோனே.

நீரகத்துக் காவிரியாந் தெய்வப் பாவை
  நிறைந்தவளந் தரவதனால் நெடிய பௌவப்
பாரகத்துச் சோறுடைத்தாம் பசித்தோர்க் கென்று
  பலபுலவர் பாராட்டும் பண்பு வாய்ந்த
ஏரகத்துக் குருவடிவாப் பிரண வத்தை
  இறைசெவிக்கே யெடுத்துரைத்த இளையான் றாளில்
நாரகத்துக் கொடுவருக்க மாலை வேய்ந்தான்
  நற்பால கவிராம நாதன் றானே.

---

உ

சிவமயம்.

பாலறாவாயர் துணை.

ஞானசம்பந்தர்

# திருப்பள்ளி யெழுச்சி.

## காப்பு.

பூத்துப் பொலியும் பொழிற்காழி வந்தெம்மைக்
காத்தருளுஞ் செல்வன் கழலிணையிற்—சீர்த்தியுறும்
பள்ளி யெழுச்சி பகரத் துணையாகுந்
தெள்ளியசீ ரைங்கரத்துத் தேவு.

## நூல்.

போற்றியென் புந்தியிற் பொலிவுசெய் பொருளே
புலர்ந்ததுன் கழலிணைப் போதினைப் போதா
லேற்றிநின் றிருவரு ளெய்துதற் கெண்ணி
யிருந்தனன் காழியி லிருந்தவன் மணியே
காற்றையுண் கட்செவி காதல்செய் கடவுள்
கண்மல ருகித்தருள் காதல வேதம்
போற்றியு மறிவரும் புகழினை யுடையாய்
புண்ணிய னேபள்ளி யெழுந்தரு ளாயே. 1

புள்ளின மார்த்தன வார்த்தனர் புலவர்
புலர்ந்தது சோலையிற் பொலிந்துறு மரும்பு
கள்ளித ழவிழ்ந்தினி தலர்ந்தது காழிக்
கவுணியர் குலம்வரு காவல காதல்
கொள்ளுநி னன்பர்கள் கூடியுன் புகழைக்
கூறிநின் றேத்தினர் குதுகல முற்றார்
தள்ளரும் பவப்பிணி தவிர்த்தெனை யாளும்
சம்பந்த னேபள்ளி யெழுந்தரு ளாயே. 2

சூரியன் றோன்றினன் றூங்கிரு ணீங்கத்
துணையொடும் பறவைகள் துயிலெழுந் தார்த்த
ஆரிய ரியாவரு மாதர வோடுன்
னணிமலர் வாய்வரு மருந்தமிழ் பாடிச்
சீரிய ராயினர் தேவர்கள் கூடிச்
செந்தளி ரடிதொழச் சிந்தனை கொண்டார்
கூரிய வேற்கரக் கொற்றவ காழிக்
குணநிதி யேபள்ளி யெழுந்தரு ளாயே. 3

காழியில் வந்தருள் கற்பக மேநின்
கழலிணை தொழுதெழுங் கருத்தினை யுடையே
னேழிசை வல்லுந ரெங்கணுங் குழுமி
யிசைத்தன ருன்புக ழெங்களை யாண்டு
வாழ்வினை நல்குவை மாசிவ பாத
மன்னிய வுளமுனி வண்பக வதியார்
தோழமை கொளுமக வாகவந் துதித்த
சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. 4

சோலையின் மலர்மதுச் சொரிந்தது வாசச்
சுரும்புக ளார்த்தன தூயசெங் கமல
மேலமர்ந் தின்றுயில் விரும்பிய வன்னம்
விரைந்தெழுந் துறும்பனி விரவுநீர் துளித்த
வேலையின் விடமுணு மேலவ னுமையாள்
விடைமிசை வந்துமெய் விளங்கிய ஞானப்
பாலமு தருந்தமுன் பரிந்தழு துயர்ந்த
பண்டித னேபள்ளி யெழுந்தரு ளாயே. 5

கங்குலிங் ககன்றது கறைபிரு ணீங்கக்
கதிரவ னுதித்தனன் கனைகடல் மிசையே
பொங்கிசை வீணையாழ் பொலிகுழல் முழவம்
பொருந்திய வொலியுடன் போந்தன ரன்பர்
கொங்கலர் மேவிமெய் குளிர்ந்தொளிர் பொதும்பர்க்
கோலக்கா நாயகன் கொடுத்தருள் தாளந்
தங்கிய செங்கரச் சம்பந்த காழித்
தனிமுத லேபள்ளி யெழுந்தரு ளாயே. 6

இரவகன் றதுகுணத் திரவிமே லார்ந்தான்
இன்னிசை பாடிநின் றேத்துகின் றார்புன்
கரவினைப் பொருமிருள் காந்தது நெல்வாய்க்
கறைமிடற் றிறைமிது காதலோ டீந்த
தரைபுகழ் சிவிகைபெற் றஞ்செழுத் தோதிச்
சமயமின் றமிழ்மிகத் தழைக்கவென் றேறும்
பரைபெறு வெங்குருப் பாலரு வாயெம்
பார்த்திப னேபள்ளி யெழுந்தரு ளாயே. 7

கோழியுங் குயில்களுங் கூவின வாவிக்
குருகுக ளார்த்தன குலவிய முரசம்
ஏழ்கட லொலியென விசைத்தது சங்க
மியம்பின வானகத் திரவியும் வந்தான்
தாழ்குழல் மங்கையைச் சார்முய லகனேய்
தனையகல் வித்திறை தந்தபங் தரைக்கொண்
டேழிசை யேவடி. வாயவண் புகலி
யின்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. 8

கூடையில் மலர்கொண்டு கூடிய தொண்டர்
குலவுநின் னடிமலர் கும்பிட விழைந்தார்
நீடிய பேரொளி நிறைகதிர் வந்தான்
நின்மல கழுமல நின்றருள் தலைவா
பீடெயில் மருகலிற் பேதையின் வணிகன்
பெறுவிட மகற்றிய பிஞ்ஞக மிழலை
நாடிறை யன்பொடு நல்கிய காசு
நயந்தவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 9

இன்னிசைக் கருவிக ளேந்திய கையர்
இயலிசை வல்லுந ரியாவருங் குழுமி
மன்னிய நின்னருள் மாண்பினை வேண்டி
வந்துநின் றூரருள் வழங்குதல் வேண்டும்
தென்னென வண்டுகள் சேர்ந்தொலி பொதும்பர்
திகழ்மறை வனத்துறை செல்வர்தங் கோயில்
நன்னிலைக் கதவினை நயம்பெறப் பிணித்த
நாயக னேபள்ளி யெழுந்தரு ளாயே. 10

மலவிரு ளகன்றது வாழ்வருள் ஞான
மாகதிர் தோன்றிற்று வான்புலப் பொழுது
புலர்வினை யடைந்தது புங்கிபங் கமலம்
பூக்கதன் பெனுநறும் புதுமதுச் சொரிந்து
வலமிகு மீன்கொடி வழுதியி னுடலம்
வந்தவெஞ் சுரந்தவிர் மன்னவ வெரியிற்
குலவிய வேடணி கொளவெடுக் துயர்ந்த
கொற்றவ னேபள்ளி பெழுந்தரு ளாயே. 11

கதிரவ னுதித்தனன் கடலொலி தாழக்
காதலர் சேக்கையிற் கலந்தனர் நின்சீர்ப்
பதிகஞ்சொல் வாயினர் பாவல ரீண்டிப்
பதமலர் தொழுதுநற் பண்பொடு நின்றார்
நதியினி லேடெதிர் நாடவின் னருள்செய்
நாயக சமணெறி நட்டவர் கழுவில்
விதிநினைந் தேறற்கு மேவிய செல்வ
வேதிய னேபள்ளி பெழுந்தரு ளாயே. 12

தாமரை மலர்ந்தது சைவரின் முகம்போற்
சங்கரற் கன்புளார் தங்கடன் முடித்துக்
காமுறு மனத்தாய்க் காத்திருக் கின்றார்
கழலிணை தொழுதெழுங் கருத்துளார் முள்ளி.
போமிகு புனலினிற் புணைபினைப் பாவே
பொற்புறு கோலெனப் போக்கியுப்த் தாண்ட
மாமணி யேசண்பை வந்தெமைப் புரந்த
மன்னவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 13

குணதிசை ஞாயிறு கூடினன் கோழி
கூவிற்றுப் புள்ளினங் குலவிநின் றார்த்த
மணமிகு வண்டுகள் மலர்மது மாந்தி
மகிழ்ந்தன தொண்டைவண் மயிலையிற் செல்வ

வணிகன்செய் மாதவ வடிவென வந்த
 வனிதைபி னென்பினை மடமங்கை யாக்கும்
குணநிதி யேதிகழ் கொச்சைநன் னகரிற்
 கோமக னேபள்ளி யெழுந்தரு ளாயே. 14

அம்புலி மறைந்தன னுதித்தன் வந்தா
 னணிமுர சொடுசங்க மார்த்தன விண்மீன்
தம்புலத் தொளிந்தது சதுர்மறை யாளர்
 சாத்திர தோத்திரஞ் சாற்றின ரெங்கும்
வம்புறு மாமலர் மாலைகொள் கையர்
 வந்துநிற் கின்றனர் மாமணத் தன்று
அம்புவி யோரெலா மரனடி சேர
 அருளிநின் றுய்ப்பள்ளி யெழுந்தரு ளாயே. 15

மலைவளர் வேட்டுவ மங்கையை வேண்டி
 வான்விளை யாடல்கள் மன்னிநின் றுய்வெண்
கலைவளர் வேணியன் கண்வரு மெங்கள்
 கற்பக மேயொளிர் கண்மணிப் பாவாய்
அலைவள ருள்ளம்பெற் றுடுத லுற்றே
 னலமரு கின்றன னடிமறந் தேனு
னிலைபெறு வானுன்னி நிழலடி சேர்ந்தே
 னிருமல னேபள்ளி யெழுந்தரு ளாயே. 16

## வாழ்த்து.

சண்பைத் திருஞான சம்பந்தன் றாளிணைகள்
பெண்பொற் கொடியொருபாற் பெம்மானை—நண்புற்று
வாழும் பெருந்தகையோர் வானமுதிற் செந்தமிழ்பல்
லூழியிவண் வாழி யுவந்து.

முற்றிற்று.

சிவமயம்.

பாலருவாயர் துணை.

# திருவேரக வருக்கமாலை.

## காப்பு.

ஏரகவேள் பாதத் தியல்வருக்க மாலைசொல
நாரகஞ்சார்ந் தேச்சுவையு நன்கருளித்—தாரகநல்
லானைமுகங் கொண்டோனு மம்மையமு துண்டோனு
மானதுணை யாவர் மகிழ்ந்து.

## நூல்.

அத்தி மாமுகத் தண்ணலா ருகவிகொண் டாங்கோர்
தத்தை யார்மணஞ் சார்ந்தவன் சங்கரன் சேயாய்
முத்த மீபவன் முதற்பிர ணவப்பொரு ளன்னோன்
சித்த மார்ந்திடச் செப்பினே னேரகஞ் சேர்வாம். 1

ஆறு சூடிய வையனே யனைவர்க்குந் தலைவன்
கூறு மம்முதற் கடவுளுங் குருவெனப் புகழ்ந்து
தேறு சீடனுப் பிரணவச் செம்பொருள் தெளியப்
பேறு தந்தருள் பெருந்தகை யேரகம் பெறுவாம். 2

இணையி லாதவிப் பிறவியை யெய்துநா மெமக்குத்
துணையு ளானுபர் சோதியுட் சோதியா நின்றோன்
அணைவி லாதவர்க் கப்புற மாகிய வாதி
பணைவி ராவிய பலவளத் தேரகம் பணிவாம். 3

ஈடி லாதவ ளொருத்தியின் மதலையா யெங்கள்
கேடி லாதநற் செல்வமா யெங்கணுங் கிளைத்துக்
கூடி யாடிய வவுணரை யழித்தகோ மகனைத்
தேடி வாழ்வருள் சேயம ரேரகஞ் சேர்வாம். 4

உலக வாழ்வினி லுயர்ந்தபன் னலங்கள்வந் துறவும்
வலைகு லாவிய மடந்தையர் மையலை மாற்றி
நிலைவி ராவிய பரகதி நிசழுவு நேச
மிலகு கந்தவே ளினிதுறை யேரக மிசைப்பாம். 5

ஓதி யம்பெறும் வழியினை யுணர்ந்தன முவந்தோம்
நீதி யெம்பரம் பொருளுமு னேடிய செல்வம்
நிதி லம்பிர ணவப்பொருள் பெற்றுயர் செம்மல்
கோதி னம்பெரு மானுறை யேரகங் குறிப்பாம். 6

எந்த நாட்டினர் மொழியினர் சமயத்த ரேனுஞ்
சிந்தை வைத்தவர் சிந்தைவைத் தவையருள் செய்து
பந்த மீட்டுயர் பரகதி வீட்டினிற் பாகந்
தந்து வாழ்வருள் சண்முக னேரகஞ் சார்வாம். 7

ஏடு வைகையி லெதிருற வின்றமிழ் பாடி
வாடி நின்றவர் மனத்துளே மகிழ்ச்சியை வைத்துப்
பீடு தந்தவன் பித்தனை யத்தனைப் பெற்றோன்
கூடி வாழ்வுறக் குலவுசீ ரேரகங் குறிப்பாம். 8

ஐந்து வான்பொறி வேடுவ ராசையாங் கயிற்றை
நைந்து சோர்வுறச் சிந்தையாங் குதிரைக்கு நாட்டி
மைந்து சார்தரு மாநில வனத்திடை வதைப்பர்
பைந்து ழாயரி மருகனு ரேரகம் பணிவாம். 9

ஒன்று கூறுவன் கேளுமி னுலகவாழ் வுடையீர்
நன்று தீதறி நலமிலா தயர்வுறு கின்றீர்
சென்ற நாள்செலச் சிலபொழு திவணுறை செயலீர்
வென்றி வேலுடை வேளுறை யேரகம் விழைவாம். 10

ஓதி யேயறி வேதமுங் காணொணா வொருவன்
சோதி யாயவன் றொல்லையெஞ் சிவன்மகிழ் குரவன்
பாதி யாகமார் பார்வதி பயந்தருள் பாலன்
ஆதி யாயவே ளார்தரு மேரக மமர்வாம். 11

ஔவை காணவோர் பாலக னாகிவந் தங்கண்
கௌவை தீர்தரு நாவலின் கனிதரு கடவுள்
வௌவ வாதுகள் பலசெய்து வள்ளியை மணந்தோன்
தௌவல் சார்வுறுச் சண்முக னேரகஞ் சார்வாம். 12

முக்க ணான்மகன் முறைநில நீர்வளி நெருப்புத்
தக்க வானிய மானன்வெங் கதிர்மதி சார்ந்து
புக்க தோர்திரு வடிவுடைப் புண்ணியன் புனிதன்
மிக்க வாழ்வினை வேண்டுசீ ரேரகம் விழைவாம். 13

பொங்கு மாகடற் புவியினிற் பொலிந்ததன் னடியார்
எங்கு வேண்டினு மின்னரு ளீந்திடு மிளையான்
கங்கை யாள்பெறு கண்மணி காழியில் வந்து
கொங்கை யாரமு துண்டவ னேரகங் கொள்வாம். 14

பச்சை மாமயி லேறிய பண்ணவன் பணைத்தோள்
செச்சை மாலைசேர் சீர்த்தியன் றேவகுஞ் சரியி
னிச்சை நாயக னிமையவர் சேனையி னிறைவன்
கொச்சை மாநகர்க் குரிசிலி னேரகங் குறிப்பாம். 15

தஞ்ச மானவர் தங்களை யின்னலிற் றவிர்த்துக்
கஞ்ச னூர்கரங் கலத்தலில் விடுதியைக் காட்டி
மிஞ்சு வான்புகழ் மேவிய சேவடி வீட்டில்
கொஞ்சு மாறுசெய் கொற்றவ னேரகங் குறிப்பாம். 16

எட்டி னேடிரண் டின்னதென் றறிகிலா தியங்கும்
கட்டு மாயையிற் கலந்துள மாக்களைக் கருதி
வட்ட மாகிய பிரணவப் பொருளினை மனத்துத்
திட்ட மாவுரை தேசிக னேரகஞ் சேர்வாம். 17

விண்ணு ளோர்களை வேதனை மாயனை வெதுப்பி
மண்ணு ளோர்தமை வாழ்வழித் திடுக்கணால் வாட்டி
எண்ணி லாப்பக லிருந்தவெவ் வவுணரை யியம
னுண்ணு மாறரு ளுடையவ னேரக முறுவாம். 18

தத்து வங்களைக் கடந்தொளிர் தனிமுத லாவான்
பத்தி செய்பவர் பாசவே ரறுத்தெறி பரமன்
நித்த னெண்குண னிறைபருள் வடிவின னிலவி
முத்தி தந்தருள் முதல்வனி னேரக மொழிவாம். 19

வெந்தி றல்வடி வேல்மழு வில்கொடி குலிசம்
முந்து தோமர மங்குசந் தாமரை முனைவாள்
சந்த வின்னிசை மணிபம்பு கண்டமாம் படைகள்
வந்த பன்னிரு கரமுளா னேரகம் வாழ்வாம். 20

ஒப்பி லாதவ னுயர்வுமில் லானொரு நாளிற்
செப்பு நான்முகத் தேவனைச் சிறைசெய்து சிரத்தில்
வெப்பு மேவிடப் புடைத்தவன் வேலமர் கரத்தன்
துப்பு வாயுமை பெறுமக னேரகந் தொழுவாம். 21

நம்மை யாள்பவ னுண்டலைக் கொடியுடை நாதன்
கொம்மை வள்ளியின் குஞ்சரி யம்மையின் கொழுநன்
வெம்மை வாழ்வினை விலக்கியா மேகது நிலையிற்
செம்மை சேருமா செய்பவ னேரகஞ் சேர்வாம். 22

பொய்ய சாகிய வமணர்வெங் கழுவினிற் புகுதச்
செய்ய வார்சடைச் சிவன்றிரு நீற்றினைப் பரப்பி
மெய்யு லாவிய சைவத்தை விளக்கிய விமலன்
நெய்ய ருதவேல் வேடிரு வேரக நினைப்பாம். 23

தர்க்க காவிய நூலெலா முணரினுஞ் சமர்த்தா
லர்க்க மாக்குதற் கறிகினு மளப்பரு மதியாற்
சொர்க்க மேகுமவ் வழியினைத் திறப்பினுஞ் சுகமோ
பர்க்கன் பாதமே பயன்றரு மேரகம் பணிவாம். 24

தொல்லை யாறுயா முகனடி தொழுங்கருத் துடையா
ரல்ல சாயவெங் கருத்துடை யார்பத மணுகி
நல்ல சிந்தையை நாட்டிலார் சிந்தையா னலிந்து
தொல்லை யெய்வது சாதலி னேரகந் தொழுவாம். 25

கொவ்வை கூடுவாய்க் குறக்கொடி குலவிய குமரன்
செவ்வி சேர்தரு தெய்வவான் சிலம்புடைச் செம்மல்
மவ்வல் மாமரா மாலையை மகிழ்ந்தவன் மக்கள்
எவ்வ மேகுமா றினிதரு மேரக மிசைப்பாம். 26

போழ்வல் வேலுடைப் புண்ணியன் மலரடி பொருந்தி
வாழ்வு ருதசெந் மலர்ப்பத முறவனை்க் திரவும்
சூழ்ந்தி வாவுமின் னுறவனைத் திரவுமேற் சுகத்தைப்
பாழ்செ யாதுநங் குமரவே ளேரகம் பணிவாம். 27

தெள்ளு செந்தமிழ் மொழியினிற் சிறந்தவா ருயிர்போல்
வள்ள லீரறு காமுளான் மெய்யென மதித்துக்
கொள்ள மூவறு கண்ணுளா ணுய்தமாக் குறிக்க
முள்ளு லாவிய வயிலுளா னேரக மொழிவாம். 28

வெற்றி வேலவ னறுமுகன் விசாகன்ரு ரகனைச்
செற்ற வன்குகன் சேயரன் மகனிறை சேந்தன்
கொற்ற வன்கடம் பன்சர வணபவன் குமரன்
நெற்றி யம்பக னீடிய வேரக நினைவாம். 29

இன்னு மெத்தனை பிறவிபெற் றினைத்தியாம் வாடிப்
பொன்னை மண்ணினைப் பொற்றெடி யார்களைப் பொருந்திப்
பின்னை நாணல நாடுருப் பேதைய ராவோம்
மன்னு சாமிநா தன்றிரு வேரகம் வாழ்வாம். 30

## வாழ்த்து.

எஃகுடைய வேரகத்தெம் மீசன் பதமலர்கள்
வெஃகுறுமென் னெஞ்சமலர் மேல்.

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

பாலறாவாயர் துணை.

# ஞானசம்பந்தர் கிளிக்கண்ணிகள்.

1. ஞானசம்பந்தனென்றும்
நற்றமிழ் மன்னனென்றும்
தேன்மொழி வாயனென்றும்—கிளியே
செல்வனைச் சொல்வாயடி.

2. மூன்றுவயதுடையான்
முதிர்பதினாறுபெற்றுத்
தோன்றுமோர்காளையாகிக்—கிளியே
சொக்கப்பொடிபோட்டானடி.

3. நேற்றிரா வென்கனவில்
நிகரிலா வின்பந்தந்து
தோற்றுநனவதனில்—கிளியே
துன்பத்தைத் தந்தானடி.

4. சின்னஞ் சிறுவனைப்போல்
செல்வன் கனவில்வந்து
கன்னல்மொழியுரைத்துக்—கிளியே
காணாது சென்றானடி.

5. பாலறாவாய்ப்பெருமான்
பாகுமொழிச் செம்மலிடம்
மேலுமென் துன்பநிலை—கிளியே
விளம்பிவருவாயடி.